தொக்கியங் காரி னதிர்குரு கூரன்சொற் சொல்பவர்க்கு
நக்கியங் கார்வினை யெல்லா முருக்கிவிண் ணல்குமெனு
முக்கியங் காட்டினை நீமண வாள முனித்தெய்வமே
புக்கியங் காவகை நீடிருண் ஞாலத்துப் புக்குறைந்தே. (௩)

திகந்தருந் தாவிப் பிடிக்கவெட் டாதுயர் சேணவிசும்பின்
சுகந்தருந் தாவினின் கீர்த்திக ணாவிற் சொலிச்செவியான்
முகந்தருந் தாகிற்ப ரேமண வாள முனித்தெய்வமே
யுகந்தருந் தாய்தந்தை நீயேயென் றுள்ளத் துணர்ந்தவரே. (௪)

ஆக்கந் தரஞ்சொரி கல்லா விடர்ப்படு மன்றுகையான்
மேக்கந் தரந்தெரி யாவகை தாங்கும்வெற் போனமர்விண்
மோக்கந் தரும்வள்ள லேமண வாள முனித்தெய்வமே
நீக்கந் தரித்தநெற் போல்வேனை ......... நின்றுமின்றே. (௫)

தேகாந்த காலத் தடியே னமன்கைச்சிக் காதளித்தல்
வாகாந் தகாது பராமுக நீசெய்தன் மாமடவார்
மோகாந்த காரத்துள் ளேன்மண வாள முனித்தெய்வமே
ஓகாந்த காவென் றழைக்கறி யேன்விரைந் தோடிவந்தே. (௬)

பரம்பிற்குள் வாழ்க்கையை நச்சியிப் பாதகன் பண்புடைநூல்
வரம்பிற் பிழைத்தன னென்றே நமன்றமர் வந்துபற்றி
முரம்பிற் கொடுநெறிக் கேமண வாள முனித்தெய்வமே
கரம்பிற் படக்கட்டி யீர்ப்பாரென் செய்வனெற் காத்தருளே. (௭)

மலைக்குமைத் தானருட் கேய்ந்தநின் சீர்வழுத் தேன்பிறரெச்
சிலைக்குறித் தேசெலு நாய்போற் பொருட்குமொண் சேயிழையார்
முலைக்குமிச் சித்துழன் றேன்மண வாள முனித்தெய்வமே
விலைக்குமிப் புன்மையி னேன்பாலென் ஞமினி நின்குறிப்பே. (௮)

---

௩. இயம்-வாத்தியம். நக்கி அங்கு ஆர்வினை என்க. முருக்கி-அழித்து.

௪. திகந்தர்-திக்கின் அந்தத்தி லுள்ளவர். தாவில்-குற்றமில்லாத. முகந்து-மொண்டு. உகந்து-சந்தோஷித்து. நாவாற்சொல்லிச் செவியான் முகந்தருந்தாகிற்பரென்க.

௫. ஆ கந்தரம் சொரி கல்லால் இடர்ப்படும் அன்று என்க. ஆ-பசுக்கள். கந்தரம்-மேகம். மேக்கு அந்தரம்-மேலுள்ள ஆகாயம். வெற்பு-மலை. நீக்கந் தரித்த நெல்-பதர். .........இக்குறியிட்ட இடம் மூலத்திலில்லை.

௬. அளித்தல் வாகாம்; பராமுகஞ்செய்தல் தகாது எ. ஓ காந்த கா வென்று அழைக்க அறியேன் என்க. காந்தன்-தலைவன்.

௭. பிழைத்தனன்-தவறினேன். முரம்பு-கல்மேடு. கரம் பிற்படக் கட்டி ஈர்ப்பார் என்க. ஈர்த்தல்-இழுத்தல்.

ஓங்கிற்குள் வாழு மடவார் சுதர்தம ரொண்புவியின்
பாங்கிற் குலாவிய சித்தம்வைத் தேபொன் படைத்தணுகா
மூங்கிற் குழாமனை யார்மண வாள முனித்தெய்வமே
தாங்கிற்கு மாறுள ரேயுன்பொற் றாமரைத் தாடொழவே. (௯)

அன்றிலை யார்பங் கயர்தரு மெய்சுமந் தம்புவிமே
னின்றிலை யார்நகை யார்தமை நச்சியந் நீசர்தங்கண்
முன்றிலை யாவக லேன்மண வாள முனித்தெய்வமே
நன்றிலை யாயினன் யானுய்யு மாறுமெய்ஞ் ஞானநல்கே. (௧௦)

திரணந் தணிந்ததா மோதர னன்பரைச் சேர்சனன
மரணந் தவிர்த்தருண் மால்பர னன்றெனும் வன்குறும்பா
முரணந்த வென்றவ னேமண வாள முனித்தெய்வமே
யரணந் தமர்க்குள தோவுன் பதாம்புய மன்றிமற்றே. (௧௧)

வான்றடி யாதிப் படைகொண் டவுணர்முன் வாக்கரய
வேன்றடி யேமுத லாம்போர் செயுமெம் பிரான்முனம்மண்
மூன்றடி தானிரந் தோன்மண வாள முனித்தெய்வமே
தோன்றடி யீறில னென்றவ ராநின்னைச் சூழ்பவரே. (௧௨)

விதுக்குறைந் தேயொல்க வொள்ளொளி வீசுநின் மெய்ந்நினைந்து
மதுக்குறுந் தாரை யொழுக்கிடுந் தேமலர் வாரியிட்டு
முதுக்குறைந் தோர்பணி தாண்மண வாள முனித்தெய்வமே
யொதுக்குறங் காதெனை யின்றடும் பாவ முருக்கெடவே. (௧௩)

கனைவாரி மண்ணுய்யு மின்னவ தாரங் கமழ்நறும்பூ
நனைவார் துழாயணி மாமார்பி ஞனளிர் பூம்படுக்கை
முனைவா ளெயிற்றர வாமண வாள முனித்தெய்வமே
யனைவார மெய்த்தந்தை யெல்லா மெனக்குன் னடித்துணையே. (௧௪)

---

௯. ஓங்கு இற்குள்-ஓங்குகின்ற வீட்டினிற்குள். சுதர்-பிள்ளைகள். தமர்-உறவினர். தாங்கிற்குமாறு-தாங்ககிற்குமாறு,

௧௦. இலையார் பங்கயர்-இலைபொருந்திய தாமரையிலுள்ள பிரமதேவர். இலையார் நகையார்-வெற்றிலை தின்ற பற்களையுடையார். நச்சி-விரும்பி. முன்றில் ஐயா அகலேன் என்க. இலையாயினேன்-இல்லையானேன்.

௧௧. திரள் நந்து-திரட்சியையுடைய சங்கம். தாமோதரனாகிய மால் என்க. முரண் நந்த-செருக்கு அழிய. அரணம்-புகலிடம். தமர்க்கு-அடியார்களுக்கு.

௧௨. வான்தடி-பெரிய கதாயுதம். சூழ்தல்-தியானித்தல். ஆதிசேஷாவதாரமாகலின் 'வாக்கரய' என விளித்தார் என்க.

௧௩. விது-சந்திரன். ஒல்க-தளர. முதுக்குறைந்தோர்-ஞானிகள். அடும் பாவம் உருக்கெட ஒதுக்கு என்க. அடுதல்-வருத்தல்.

௧௪. கனைவாரி-ஒலிகடல். திருமார்பினனது குளிர்ந்த அழகிய படுக்கையாகிய கூரிய பல்லினையுடைய ஆதிசேடனாகிய அரவு நின் அவதாரம் என்க. அனை-தாய். வாரம்-அன்பு.

ஏசப் படுநகர் புன்மாக்க ளென்னவு மேதமுற
வாசப் படுதா மரைநாளங் கால்சுற்று வாரெனவு
மோசப் படுதெனன் றேமண வாள முனித்தெய்வமே
பேசப் படுகேடன் மண்மீதில் யானிற் பிழைத்துநின்றே. (௧௫)

மைத்தடப் பார்வை மடவார்குற் றேவன் மதித்தவர்கொங்
கைத்தடப் பார வரைமேவு மைவர் களித்தறுவர்
மொய்த்தடப் பாதக னைய்மண வாள முனித்தெய்வமே
பைத்தடப் பாந்த ளரசேயெய்த் தேன்விழி பார்த்தருளே. (௧௬)

முனிவன் பரம்புவிக் கின்றாகச் செய்ததா மோதரனே
முனிவன் பரனென் றுணர்ந்தெங்கண் மூர்த்திவா னாசலமா
முனிவன் பரவித் தொழுமண வாள முனித்தெய்வமே
முனிவன் பரகத் திலாதாய்நின் றாளென் முடியணவே. (௧௭)

சசலத் தினுமொள்ளி தாஞானர்க் குந்தமி யேனுக்குமோங்
கசலத் தினுக்கு மணுவுக்கும் வாசியுண் டாமதுபோன்
முசலத் தெழுந்தளிர் போன்மண வாள முனித்தெய்வமே
குசலர்க் கினிய பிரானேயென் னன்புன் குரைகழற்கே. (௧௮)

உட்கான தேவொரு நீவந்து வாழ்வுற் றுறைதலினுற்
றிட்கா னமன்றமர்க் கஞ்சே னவர்கள் செலுத்தும்வெய்ய
முட்கான மும்பட ரேன்மண வாள முனித்தெய்வமே
கட்கா னறுமலர் போலுநின் றூய கழற்கன்பனே. (௧௯)

---

௧௫. ஏசப் படு நகர் புன் மாக்கள்-யாவரும் தம்மை ஏசும்படி மதுவைப் பானஞ்செய்கின்ற புல்லிய மாக்கள். படு-கள். மாக்கள்-ஐயறிவேயுடைய விலங்குபோல்வார். கள்ளுண்டு அறிவு கெடுத்தலின் இவ்வாறு கூறினர். படுதாமரை-தாமரையில் ஓர்விதம். நாளம்-தண்டு.

௧௬. கொங்கைத் தடமாகிய வரை யென்க. வரை-மலை. ஐவர் என்றது ஐம்பொறிகளை. அறுவர் என்றது காமம் முதலிய அறுபகையை. மொய்த்து அட-நெருங்கி வருத்த. பை-படம். பாந்தள்-பாம்பு. எய்த்தேன்-இளைத்தேன்.

௧௭. வன் பரம் புவிக்கு இன்று ஆக முன்னிச் செய்த தாமோதரனே முன் இவன் என்க. பரம்-பாரம். இன்றாக-இல்லையாக. முனி-கருதி. வானாசலமா முனிவன்-வானமாமலை ஜீயர். பரவி-புகழ்ந்து. முனிவு அன்பர் அகத்து இல்லா தாய் என்க.

௧௮. முசலம்-உலக்கை. குசலர்-அறிவுடையோர். ஞானிகளான பெரியோருக்கும் அஞ்ஞானியாகிய சிறியேனுக்கும் எவ்வளவு வாசியுண்டோ, பர்வதத்திற்கும் பரமாணுவுக்கும் எவ்வளவு வாசியுண்டோ அவ்வளவு வாசியுண்டு நான் நின்பால் வைத்த அன்பிற்கும் நீ என் பால் வைத்த அன்பிற்கும் என்றாரென்க. அதுபோலும் என்பது அது போன்ம் என்றாயிற்று. தம்பால் அன்பு தோன்றுதலை முசலத்திடத்துத் தளிர் தோன்றுதல் போலும் என்று வியக்கின்றாரென்க.

௧௯. உட்கு ஆன-மனத்திற்கு ஏற்ற. நமன்றமர்க்கு உட்கு ஆன என்றியைப்பினுமமையும். உட்கு-அச்சம். நின் கால்-வலியகால். முள்கானம்-முள் நிறைந்த காடு. படரேன்-செல்லேன். கள் கால் மலர்-மதுவைச் சொரிதலையுடைய மலர்.

நீர்த்தீயென் றேநினைந் தெல்லா வினைக்குநின் பேரிதனைக்
கீர்த்தியென் றுந்தனி நாவேயென் றுலது கேட்கிலைசின்
மூர்த்தியென் கண்மணி யேமண வாள முனித்தெய்வமே
பேர்த்தியென் றேய்க்குநின் பொற்றாளஞ் ஞானவிப் பேரிருளே. (உ0)

கழைக்கேழ் வரிசிலை மாரனை யேவென்றுங் கற்கடுங்கா
னுழைக்கேத மற்றுண னீக்கிமெய் வாட்டியு மோங்குவரை
முழைக்கே புகுந்துமென் ஞமண வாள முனித்தெய்வமே
பிழைக்கேட ராயுன் னடிக்காட் படாதுழல் பேதையரே. (உக)

சகடியை நெஞ்சர் சிலர்நின்னை விட்டவர்த் தாழ்வதென்பூ
மகடிர மொன்றத் தருஞ்செல்வ மாலுண்ட மண்மிசைப்புன்
முகடீயுந் தான்றரு மோமண வாள முனித்தெய்வமே
யகடில்புன் றேவர் தருவர்கொ னீநல்கு மவ்விசும்பே. (உஉ)

செழுமணி வாயிற் றிறன்மன்னர் மற்றது நீர்ந்துகைந்நெ
கிழுமணி ஞர்களு மாதல்கண் டோங்கிளர் வேலைநல்கு
முழுமணி யேயமு தேமண வாள முனித்தெய்வமே
தொழுமணி தாகவின் னல்குது மென்றெம்மைத்தொண்டுகொள்ளே.

நாக்குற்றந் தீரவுன் பேர்வாழ்த்துங் கண்க ணயக்குநின்மெய்
நோக்குற் றுளநினை யேயெண்ணு மோந்திடு நன்கழற்பூ
மூக்குற் பவப்பகை யேமண வாள முனித்தெய்வமே
தாக்குற்க மாமிவை வெவ்வினை யாமிந் தனத்தொகைக்கே. (உச)

---

உ0. நல்வினையை வளர்க்க நீரும் தீவினையை யழிக்கத் தீயும் போலுமென நினைந்து என்க. என்றும் கீர்த்தி-எப்போதும் புகழ்ந்து சொல். சின்மூர்த்தீ-ஞான வடிவே. அஞ்ஞானப் பேரிருளைப் பேர்த்து என்றேய்க்கும் பொற்றாளை ஈ என்க. என்று-சூரியன். ஏய்த்தல்-ஒத்தல்.

உக. கழை-கரும்பு. கல் கடுங் கான் உழை-கல் நிரம்பிய கொடிய காட்டிடம். சேதம்-துன்பம். வரை முழை-மலைக் குகை.

உஉ. சகடு-சகடக்கால். பூமகள் நிலைநிற்கத் தரும் செல்வம் என்க. முகடி-மூதேவி. அவர்த் தாழ்வது-புன்றேவரைத் தாழ்வது.

உங. திறல் மன்னர்-படை முதலிய வலியையுடைய மன்னர். கை கழுவிய மட்பானையை யுடையவர்களாதல் கண்டோம் என்க. 'சிதைகிய பானையர்' என்றார் பெரியாரும். மண்ணினர் - மட்பாண்டத்தை யுடையோர். கைவிட்டு நீங்கிய (மண்ணினர்) பூமியையுடையவர்களாதலுங் கண்டோமென்றலுமாம். வேலை-சமுத்திரம். அணிதாக-சமீபமாக.

உச. நா பேர்வாழ்த்தும், கண்கள் மெய் நயக்கும், உளம் நினையே யெண்ணும், மூக்கு கழற்பூ மோந்திடும் என்க. பிறவியே மறுப்பவருகளின், 'உற்பவப் பகையே' என்றார். இவை என்றது மேற்கூறிய வாழ்த்துதல் முதலிய நற்செய்கைகளை. வினையாகிய இந்தனத்தொகைக்கு இவை உற்கம் என்க. இந்தனத் தொகை-விறகு கட்டு. உற்கம்-கடைக்கொள்ளி.

தகமண் டலத்துணின் ரூமரைத் தாள்களுந் தண்ணரையி
னகமண் டணிகொள்செந் தானையு மெய்யு நளிர்மதிசேர்
முகமண் டலமுமுற் றும்மண வாள முனித்தெய்வமே
யகமண்ட விப்பெரும் பேறுபெற் றேனெனக் கார்கிகரே. (உரு)

காட்டட நீயஞ்ச லென்றெனக் குன்கழல் கண்டிரிய
நீட்டட ரேலென் றவற்கெனைக் கொண்ணிலை யாவணம்பாய்
மோட்டடன் மேதியின் மேன்மண வாள முனித்தெய்வமே
தோட்டட மால்வரை போற்கூற் றிவர்ந்தென்முன் சூழ்பொழுதே. ()

புதற்குணச் சுற்ற வமுதங் குகுப்பது போற்றமிழைக்
குதற்குணர்ச் சிப்பிழை யோர்க்கோதி யான்குண மூன்றுண்மூழு
முதற்குணத் துத்தம னேமண வாள முனித்தெய்வமே
மதற்குணத் தக்கவெங் காமத்து ளாழ்துயர் மாற்றுவையே. (உஎ)

தொழினூற்றந் தான்மிக வேதஞ்சொன் மாலைத் தொழுந்தொழன்மி
ணிழிநூற்றந் தாளா யெனுஞ்சட கோப னிசைத்திருவாய்
மொழிநூற்றந் தாதி சொலுமண வாள முனித்தெய்வமே
யழிநூற்றந் தாவள நேரிடைக் கொங்கைய ரன்பெனக்கே. (உஅ)

திருக்கி மயக்கிவெம் மாயா பிரபஞ்சச் சேற்றழுத்திச்
செருக்கி யுருத்தெரி யாவாறு செய்வினை நாமமற
முருக்கி யெனைப்புரந் தாய்மண வாள முனித்தெய்வமே
யுருக்கி யுளத்தை யழன்மெழு காக்கிக்கொ ளுள்ளுறைந்தே. (உகூ)

---

உரு- நக-விளங்க. தானை-ஆடை. அகம் அண்ட-மனத்தில் நெருங்கி இருக்க. தக மண் தலத்துள் என்க.

உசு. அட! நீ அஞ்சலென்று எனக்கு உன் கழலைக் காட்டு; (அட! நீ) அடரேலென்று அவற்கு (உன் கழலைக்) கண்டு விலகும்படி நீட்டு; என்னை நிலையடிமை கொள் என்க. ஆவணம்-முறிச்சீட்டு. மோட்டு அடல் மேதி-பெரிய வலிய எருமைக்கடா. மால்வரைபோலுந் தடந்தோள் கூற்று என்க. கூற்று-இயமன். மேதியின்மேல் இவர்ந்து என்க. இவர்தல்-ஏறுதல்.

உஎ. நச்சுற்ற புதற்குள் என்று மாறுக. நச்சு-விஷஜந்துக்கள். குதற்க உணர்ச்சி என்பதில் அகரம் தொகுத்தல். முதல் குணம்-ஸத்துவகுணம். மதன்-அஞ்ஞானம்; மன்மதனுமாம். விருப்பம் பொருந்திய அமுதையென்றலு மமையும்.

உஅ. தொழின் ஊற்றமிக (ஆளாகி) மாலைத் தொழும். இழிந்த நூற்களைச் செய்து ஆளாகிப் பிறரைத் தொழன்மின் என்றருளிய சடகோபன் என்க. நூல் நேர் இடை தந்தாவளம் நேர் கொங்கை என்க. தந்தாவளம்-யானை. கொங்கைய ரன்பை யழியெனக் கூட்டுக.

உகூ. வினை நாமம் அற-வினையினது நாமமே யில்லாமல். நாம்-அச்சமுமாம். புரத்தல்-காத்தல். நருக்கி யென்றும் பாடம்.

பூத்தோய் நினது கழலிணைக் கேயன்பு பூண்டிறைஞ்சி
நாத்தோல்வி யின்றிப் புகழ்கில ளுயினு நல்லறிவின்
மூத்தோ யருட்பெரி யோய்மண வாள முனித்தெய்வமே
காத்தோர் பொழுதும் விடாதெனை யாளக் கடனுனக்கே. (௩௦)

கற்றோர் பரவு மிராமா நுசனையென் கண்மணியை
நற்றாது சேர்மலர் தூய்ப்பணி யுந்தொறு நாளுமன்பு
முற்றா வுளத்தமு தேமண வாள முனித்தெய்வமே
சிற்றா ளுனக்கரங் கேசன்முன் னுய்நின்ற சீர்மைநன்றே. (௩௧)

அட்டதிக் கிற்கயம் போலெண்ம ரசரிய ரன்பின்மிக்கா
ரிட்டமுற் றேத்துநின் றாள்பர வாதுழ லெம்மைமண்மேன்
முட்டவொட் டாதளித் தாய்மண வாள முனித்தெய்வமே
சிட்டருக் கென்கடன் றுட்டரைச் சீர்ப்பிக்குஞ் சீரன்றியே. (௩௨)

இழிந்தாசை நீருளெய்த் தார்பிறர் யாம்படித் தேறிநின்றெய்ப்
பொழிந்தா றினமெய் யுபதேச ரத்தின வொண்டொடைநூன்
மொழிந்தா யெமக்கெளி யாய்மண வாள முனித்தெய்வமே
வழிந்தாய் மலர்நறை யீரிக்கு நின்கழல் வங்கம்விட்டே. (௩௩)

கடையுக மிந்தக் கலியுக நான்குளுங் காட்சிபெற்றா
ளுடையுர மேமிக் குனமற வார்சொலு முண்மைதப்பி
முடையுட றாங்கிநின் றேன்மண வாள முனித்தெய்வமே
மிடையும்வெந் தீவினை யுண்ணின்று மென்னை வெளிப்படுத்தே. (௩௪)

---

௩௦. ஓர் பொழுதும் விடாது காத்து என்க. நாவுக்கு வெற்றி புகழ்தல் என்பார் 'நாத்தோல்வியின்றிப் புகழ்கிலன்' என்றார்.

௩௧. தாது-மகரந்தம். தூய்-தூவி. அன்பு முற்று ஆ உளம்-அன்பு முற்றுதலை யடைகின்ற மனம். முன்னுய் நின்ற-முன்னர் ஆகி நின்ற.

௩௨. கயம்-யானை. அஷ்ட திக்கஜம் ஆவார்-வானமாமலை ஜீயர், பரவஸ்து பட்டர்பிரான் ஜீயர், திருப்பதி எம்பெருமானர் ஜீயர், கோயில் கந்தாடை யண்ணன், பிரதிவாதி பயங்கரம் அண்ணன், எறும்பி அப்பா, அப்பிள்ளை, அப்பிள்ளான் என இவர். சீர்ப்பித்தல்-சீருடையவராகச்செய்தல்.

௩௩. எய்ப்பொழிந்து-இளைப்பொழிந்து. உபதேசரத்தின ஒண் தொடைநூல்-உபதேசரத்தின மாலையாகிய ஒள்ளிய பிரபந்தம். ஆய்மலர் நறை வழிந்து ஈரிக்கும் நின்கழல் என்க. நறை-தேன். வங்கம் விட்டு-தோணியைச் செலுத்தி. சொலப்பய குணசீலனுகிய மணவாள மாமுனியின் திருவடிகளை வணங்காதார் பிறவிக்கு வித்தாகிய ஆசைப்பெருங்கடலைக் கடத்த லரிதென்பதா மென்க.

௩௪. உரம்-ஞானம். முடை-துர்க்கந்தம். மிடைதல்-நெருங்குதல்.

கேளா ரெனினுன் னடியார்க் கடிமைசெய் கீழ்மையர்க்கே
யாளா யுழல்பவ ரல்லா ரெவரெனி லன்பவர்பான்
மூளா ரெனவினை யார்மண வாள முனித்தெய்வமே
வாளா கழிகின் றனருல கோரிவை மாறுசெய்தே. (௩௫)

கனியே னுனக்கன்புன் றொண்டர் குழாமுங் கலந்திறைஞ்சே
னனியேத மிக்குழல் புன்மனத் தேனுன்னை நம்பிநின்றேன்
முனியே லடியனை நீமண வாள முனித்தெய்வமே
தனியேனுன் பொன்னரு ளன்றிமற் றோர்பெருஞ் சார்பிலனே. (௩௬)

சுத்தோ தகமென்னும் வான்கங்கை யோசுடர் மாமதியோ
வொத்தோத ஞாலத் துறவுவிட் டோர்மனத் தொள்ளொளியோ
முத்தோ வறிகின்றி லேன்மண வாள முனித்தெய்வமே
சித்தோ ருருக்கொண் டவதரித் தாய்நின் றிருவுடம்பே. (௩௭)

பாட மறைப்பொரு ளெல்லா மிவர்க்கெனப் பார்வியக்கும்
வேட மமைத்தவர்க் கோவுனை யேபற்று மெய்த்தவர்க்கோ
மூட மனத்தவர்க் கோமண வாள முனித்தெய்வமே
பீட மலர்த்திரு வாழ்மார்ப னல்கும் பெருவிசும்பே. (௩௮)

என்னதுர்க் கந்த மிதென்ன வருவருப் பிடவுடற்குண்
மன்னவைத் தாறு பகையாகும் வன்கொடு வல்லியங்கண்
முன்னவுய்த் தாயென்செய் கேன்மண வாள முனித்தெய்வமே
நின்னருட் கென்றிலக் காக்கிக்கொள் வாயென்க ணேசம்வைத்தே. ()

அறையோத மாக்கடல் சூழ்புவி யோருன் னடிதொடரார்
வறையோடு நேர்சிரத் தார்மாலை வாழ்த்திவள் ளான்முறையோ
முறையோவென் றோலமிட் டென்மண வாள முனித்தெய்வமே
பறையோதை யேனுமீ தென்னென்ப துண்டிறைப் பான்மையுமே. ()

---

௩௫. கேள்-உறவினர். கீழ்மையர்-கீழ்ப்படிதலையுடையோர். அல்லார்-கேள் அல்லார். வாளா-வீணே.

௩௬. நனி யேதம் மிக்கு-மிகவும் குற்ற மிருந்து. சார்பு-புகலிடம்.

௩௭. உதகம்-நீர். வான் கங்கை-ஆகாய கங்கை. சித்து-அறிவு.

௩௮. உன்னைப் பற்றுதலே மெய்த்தவமாவது, அத்தவ முடையார்க்கல்லது ஏனைக் கைதவ முடையார்க்குத் திருமால் விசும்பு நல்குமோ என்றார் என்க.

௩௯. மன்ன-பொருந்த. வல்லியங்கள்-புலிகள்.

௪௦. அறைதல்-ஒலித்தல், என்-என்ன பயன்? ஓதை-ஓசை.

கந்தார் களிற்று மருப்பொசித் தோன்கழ லாம்வகுளப்
பைந்தாம னற்சர ணுமெதி ராசன் பதாம்புயத்தின்
மூந்தா தரம்வைத்து ளாய்மண வாள முனித்தெய்வமே
சிந்தா குலந்தவிர்த் திங்கென்னை யாளச் சிந்தைசெய்யே. (சக)

தக்கோ ரெலாங்கண் டிகழமெய்ந் நூனெறி சற்றுமின்றி
மைக்கோல வாள்விழி யின்னார்க்கு ளாகி மயங்குகின்றேன்
முக்கோ லணிகரத் தாய்மண வாள முனித்தெய்வமே
யக்கோர வல்வினை தீர்த்தென்னை யுன்னன்பர்க் காட்படுத்தே. (சஉ)

ஒத்தரு ணன்கதிர் போற்பரி சித்துல குற்றிடினுஞ்
சுத்தரு ளன்புனக் கானவர் சென்மத் தொடரறுத்த
முத்தரு மங்கவ ரேமண வாள முனித்தெய்வமே
யெத்தரு மங்களும் பாவங் களுமவ[illegible]கென்செய்வதே. (சங)

வாதாதை வோருறு மெய்யொழித் தாட்கொள்ள வந்துநல்ல
நாதா தயாநிதி யென்றுனைப் போற்ற நமர்கட்கெல்லா
மூதாதை யேயெந்தை யேமண வாள முனித்தெய்வமே
போதாதை யாவுன் னருட்கென்னை யிங்குப் புகுத்தியதே. (சச)

சேயா னவனியி லாகப் பெறுந்தந்தை சிந்தைமகிழ்
வாயா னவமுறுங் கன்றுக் கிரங்குவ தன்னதன்மை
மோயான வாவெண்ணி லாமண வாள முனித்தெய்வமே
நீயான வாவிச் சென்மக் கடலென்னை நீக்குதற்கே. (சரு)

நாற்கரைப் பேருத திப்புவித் தோன்றி நசிக்குமிந்தத்
தோற்கரைக் கூறை வயிற்றா ணிவைமுதற் சூழ்ந்துநச்சி
மூற்கரைப் பாடு மெனமண வாள முனித்தெய்வமே
மேற்கரைப் பாருன்னை யன்றிமற் றியாருய்த்து மெய்ந்நெறிக்கே. (சசு)

---

சக, கந்து-கட்டுத்தறி. மருப்பு ஒசித்தோன்-கொம்பை ஒடித்தோன். வகுளப் பை தாமன்-பசிய மகிழம்பூ மாலையை யுடையோன், நம்மாழ்வார். ஆதரம்-அன்பு. ஆகுலம்-துன்பம்.

சஉ. முக்கோல்-திரிதண்டம். கோரம்-கொடுமை.

சச. சப்த தாதுக்களோடுங்கூடிய ஐவோர் உறும் மெய்யொழித்து ஆட்கொள்ளவா, வந்த நாதா! தயாநிதியே! யென்று உன்னைப்போற்ற நல்ல நாவினைத் தா என்க. [illegible]ோதாது ஐயா எனக் கண்ணழிக்க.

சரு. சேய்-குழந்தை. அவனி-பூமி. மோய்-தாய்.

சசு. உததி-சமுத்திரம். தோற்கு-தோலுக்கு. கூறை-துணி. நல்வழிச் செலுத்திக் கரைப்பா ருன்னையன்றி வேறு யாருளர் என்க.

பாங்கையன் பேரருட் டாய்நீயென் றெண்ணியுன் பாதத்தொண்பூத்
தூங்கையன் பாளர்க் காட்பட்டி லேற்குத் தொலைந்ததுநாண்
மூங்கையன் காணருள் வாய்மண வாள முனித்தெய்வமே
வாங்கையன் காநமன் றன்பாற் படாதென்னை வல்விரைந்தே. (சஎ)

நாரிக் களிசெறித் தோனேவி னாற்செற நைந்துபுலைச்
சேரிக் களினுங் கொடியமின் னார்முலை சேர்ந்தைவர்வெம்
மூரிக் களிறுகள் போன்மண வாள முனித்தெய்வமே
கூரிக் களியடைந் தாரஞ்சி னேனென்னைக் கூவிக்கொள்ளே. (சஅ)

கண்டகத் தான்கண்டு நாவார வாழ்த்திக் கமழ்நறும்பூக்
கொண்டகத் தால்வரும் புன்சென்ம மாறக் குறித்துனது
முண்டகத் தாள்களிற் றாய்மண வாள முனித்தெய்வமே
தொண்டகத் தாகியென் ஞான்றடி யேனுன்னைச் சூழ்வதுவே. (சகூ)

சூழ்குய வன்சக் கரம்போல் வருஞ்சன் மச் சூறைக்குள்ளாய்
மாழ்குயர் வல்வினை யெல்லா மொழியுநம் வாரியருண்
மூழ்குய வாவெனக் கூய்மண வாள முனித்தெய்வமே
கேழ்குய மொன்றுமின் னார்மையன் மாற்றிக் கிளர்விப்பையே. (ருo)

விழிப்பிள்ளை மான்மருட் டால்விலை கொள்ளுமின் னார்கணகக்
கிழிப்பிள்ளை யார்முலைச் சிச்சைய னேனுங் கிளர்திருவாய்
மொழிப்பிள்ளை சேவடி யாமண வாள முனித்தெய்வமே [லுமே.
பழிப்பிள்ளை சொல்லுங்கொளல்போற்கொள்வாயென்புன் பாச்சொல்

---

சஎ. பாங்கு ஐயன்-உரிமையை யுடைய பிதா. பூ தூம் கை அன்பாளர்-மலரைத் தூவுகின்ற கையினையுடைய அன்பர்கள். மூங்கையன்-ஊமையன். வாங்கு ஐயன் எனப்பிரிக்க. ஐ-சிலேட்டுமம். சிலேட்டுமங் கட்டியிழுக்க, அதனால் வாய் பேச முடியாது மூங்கையனாய்க் கிடக்கும் என்னை நமன்பாற் படாது வல் விரைந்து காத்தருளாய் என்க.

சஅ. நாரிக்கு அளி செறித்தோன்-மன்மதன். நாரி-வில் நாண். அளி-வண்டு. எவினால்-அம்பினால். செற-கொல்ல. களினும்-கள்ளினும். மூரி களிறுகள்-வலிமை பொருந்திய யானைகள்.

சகூ. கண் தகக் கண்டு, நாவார வாழ்த்துதல் செய்து, பாவத்தால் வருகின்ற இழிபிறப்புக்கள் ஒழியக் கருதி, உனது தாமரையை யொத்த திருவடிகளில் கமழ்கின்ற நறிய பூக்களைக்கொண்டு அருச்சித்துத் தொண்டக் குலத்தினேனாகி அடியேன் நின்னை வணங்குவது என்றுகொலோ என்க.

ருo. சூறை-சுழல்காற்று. மாழ்கல்-மயங்கல். அருள்வாரியிலே மூழ்கு உய்யவா எனக் கூவி என்க. வாரி-வெள்ளம். கேழ் குயம்-ஒளிதங்கிய முலை.

ருக. பிள்ளைமான் விழி மருட்டால் என்க. மருட்டல்-மயக்கல். நகக் கிழிப் பிள்ளையார் முலை-நகத்தினது வடுவாகிய பிளத்தலினைப் பொருந்துதலுடைய முலை;

வான முதலைக் கருள்சுட ராழிவல் லோன்மகிழக்
கான முதவு மறைத்தமிழ் பாடிக் கனிந்தசெவ்வாய்
மோன முதலைத் தொழுமண வாள முனித்தெய்வமே
தேனமு தம்மென நின்சீரென் னுண்ணின்று தித்திக்குமே. (ருஉ)

தூசனஞ் செம்பொன் முதலாய நச்சிவெந் தொல்வினையின்
பாசனஞ் சென்ம மிதென்னவெண் ணேன்செயும் பல்பிழையு
மோசனஞ் செய்தருள் வாய்மண வாள முனித்தெய்வமே
தேசனஞ் செய்வளர் சீரரங் கேசற்குத் தேசிகனே. (ருங)

காலமென் பார்விப ரீதானு கூலங்கள் காண்பதிந்த்ர
சாலமென் பாரினில் வாழ்வென்பர் நின்னவ தாரத்தைமான்
மூலமென் பாய லெனுமண வாள முனித்தெய்வமே
கோலமென் பாருடல் சேர்ந்திங்கு வாழ்கை கொடிதெனக்கே. (ருச)

கன்மத் தகப்பட் டுயிர்யாவு நோவன கண்டறிந்தும்
வன்மத்த னுத்துக் கருணைசெய் யானளை வாரியுண்டு
முன்மத் தடிக்குவந் தோன்மண வாள முனித்தெய்வமே
யுன்மத்த சித்த னெனைநீவந் தாண்டுகொ ளுற்றுணர்ந்தே. (ருரு)

அப்புரி நாகம் விடல்போ லுயிர்மெய் யகல்வதெனச்
செப்புரி யோர்மொழி கேட்டுய்ந் திடாச்சிறி யேற்கருளாய்
முப்புரி நூலணி தோண்மண வாள முனித்தெய்வமே
யெப்புரி யோநின் புரியாம்விண் ணன்றி யிருப்பிடமே. (ருசு)

---

ருஉ. முதலைக்கு வானம் தந்து (கஜேந்திரனைக் காத்து) அருளிய ஆழி வல்லோன் என்க. மோன முதல் என்றது நம்மாழ்வாரை. மலஜல மின்றித் திருப்புளி யாழ்வாரின் கீழே மௌனமாய் எழுந்தருளியிருந்த ஞான மூர்த்தியாகலின் இவ்வாறு கூறினர். 'மோனமென்பது ஞான வரம்பு'. தேனமுதம்-தேன்கலந்த பால். தேனும் அமுதமுமாம்.

ருங. தூசு-ஆடை. அனம்-சோறு. பாசனம்-மட்கலம். தொல்வினையின் பாசன் நம் சென்மம் இதென்ன எண்ணேன் என்று பிரித்துரைத்தலுமாம். மோசனஞ் செய்தல்-தீர்த்தல். தேசு அன்னம்-ஒளியையுடைய அன்னம். செய்-வயல்.

ருச. இந்த்ர சாலம் என் பார்-இந்திர ஜாலம் என்று சொல்லத்தக்க பூமி. பாயல்-பாய்.

ருரு. அளை-தயிர். வன்மத்தன்-உட்பகையை யுடையோன். மத்து அடிக்கு உவந்தோன் என்க. உன்மத்த சித்தம்-மயக்கமுற்ற மனம்.

ருசு. புரிவிடல்-தோலுரித்தல். செப்ப உரியோர் என்க. முப்புரி-பூநூல். புரி-ஊர்.

கற்றில னின்புகழ் நீவந் தெனுட்கல வாமையினல்
வெற்றிலன் பற்றவென் பொல்லா வழுக்குடன் மெய்யுணர்வின்
முற்றிலன் றேவுய்வன் யான்மண வாள முனித்தெய்வமே
பற்றிலன் றேமனம் வைத்தேற்குண் டோதொல் பரகதியே. (ருஎ)

இதவா சகமு மொழியா ரிடைபடு மேல்லையினு
முதவா ரவரென்ன மெய்த்தேவ ரோவென் னுளத்துளின
முதவாரி யின்பெருக் கேமண வாள முனித்தெய்வமே
மதவாத வர்க்கரி யேறேமெய்த் தேவனம் மாதவனே. (ருஅ)

துகிற்கம ரேசனு மோகிக்க வேசெய்து சூழ்ந்துடுப்பா
ரகிற்கமழ் வாசப் புகையூட்டு வார்குழற் கக்குழலோ
முகிற்கமஞ் சூலனை யார்மண வாள முனித்தெய்வமே
புகிற்கமர் வாய்ப்பொன் புணர்வோ ரவர்மயல் போக்கெனக்கே. (ருகூ)

வடிக்கணி ஞர்மய லால்வரச் சேர்ந்து மயங்கியுன்றாட்
பொடிக்கணி வாழ்வதில் புன்சிரத் தேனெதி பூபதிதாண்
முடிக்கணி யாகக்கொண் டாய்மண வாள முனித்தெய்வமே
செடிக்கணி யார்வெம் பிறவியைத் தீர்த்தென்னைச் சேமிப்பையே. (சுO)

நூலியல் பாற்றெளிந் தன்பரை வாழ்விக்கு நுண்ணுணர்வின்
வாலிய ராநம ஸ்ரீசயி லேசர் மலர்க்கழல்பொன்
மோலிய தாஞ்சிரத் தாய்மண வாள முனித்தெய்வமே
சேலியல் வாரிப் புவிக்கீ யுதித்தபின் சீர்பெற்றதே. (சுக)

சூழ்கிர ணத்தரு ணம்புயம் போலுநின் றூயநற்றாள்
வீழ்கில ராய்க்கு வாழ்வோர் சிலர்விர ஜாநதிபோய்
மூழ்கினும் பேறில ராய்மண வாள முனித்தெய்மே
யாழ்கிணற் றுட்பட் டமிழ்வோரிற் கேவலத் தாழ்வர்களே. (சுஉ)

---

ருஎ. அன்பு அற்று என் அழுக்குடல் வெறிய இல் என்க. வெற்றில்-பாழ்வீடு.

ருஅ. இடைபடும் எல்லை-துன்பப்படுங் காலம். இன் அமுத வாரியின் பெருக்கே என்க. மதவாதவர்-பிற மத வாதியர். அரி-சிங்கம்.

ருகூ. துகில்-ஆடை. அமரேசன்-இந்திரன். குழற்கு அகில் புகை யூட்டுவார், அக்குழல் நிறைந்த சூலினை யுடைய முகில்போல்வார் என்க. பொன் புணர்வோர்-பொன்னின் பொருட்டுப் புணர்தல் செய்வோர்.

சுO. செடி-துர்க்கந்தம்; பாவமுமாம். சேமித்தல்-காத்தல்.

சுக. வாலியர்-தூய்மையையுடையோர். மோலி-கிரீடம்.

சுஉ. அருணம்புயம்-செந்தாமரை. அருணம்-மிகு சிவப்பு. வீழ்தல்-ஆசைப்படல்; வீழ்ந்து வணங்குதல் என்றலுமாம்.

சுங. சென்னி மொட்டித்த கையினர்-முடிமேற்கூப்பிய கையினையுடையார்.

சுட்டித் தவமுயன் றுன்னரு ளான்மது சூதனற்காட்
பட்டித் தரைக்குளுற் றோர்வான மேறப் படரிற்சென்னி
மொட்டித் தகையின ராய்மண வாள முனித்தெய்வமே
கிட்டித் தமிற்கொண் டுபெசரிப் பார்சுரர் கேண்மையுற்றே. (௬௩)

பிடியுடை வாள்பல கைக்கைய ராய்முறை பேணிமுறைப்
படியுடை வார்மனந் தீமெழு காகியுன் பத்தர்கட்கே
முடியுடை வானவர் தாமண வாள முனித்தெய்வமே
மடியுடை வாச மலர்முத லீந்து வணங்கினின்றே. (௬௪)

ஞாலத் தவஞ்செய் மதவா தியரை நடுக்குறுமுக்
கோலத் தவரி சமயத்தி னோர்க்கனு கூலதுலா
மூலத் தவதரித் தாய்மண வாள முனித்தெய்வமே
யேலத் தவமிலி யானேனை நீவந் தெடுத்தருளே. (௬௫)

இக்காலங் நாள்விடை யோனைவென் றோனெய்யு மீர்ங்கணைக
டொக்கால மாமென வந்தே யடப்படுந் தூர்த்தனென்னை
முக்கால முந்தெரி சீர்மண வாள முனித்தெய்வமே
யக்கால னென்செய்வ னேவறி யேன்வந் தருள்புரியே. (௬௬)

மா தூர மாயினும் வந்துநம் பாலிங்கு வாவெனக்கூய்
மீதூ ரவாவுற் றெளியேனை யாள்வியன் கூரமென்னு
மூதூ ரனைத்தொழுஞ் சீர்மண வாள முனித்தெய்வமே
நீதூர வென்சன னச்சா கரத்தை நிலையழித்தே. (௬௭)

---

௬௩. சென்னி மொட்டித்த கையினராய்-சிரசின்மேற் கூப்பிய கையினை யுடையராய். சுரர்-நித்தியசூரிகள். கேண்மை-நட்பு.

௬௪. பலகை-கேடகம். முறைப்படி பேணி மனம் தீ மெழுகாகி யுடைவார் என்க. மடி உடை-பரிசுத்தமான வஸ்திரம்.

௬௫. அவம் செய்தல்-பயனற்றனவற்றைச் செய்தல். நடுக்குறச் செய்கின்ற முக்கோல் அத்த! என்க. அரி சமயம்-விஷ்ணு மதம். துலா மூலம்-ஐப்பசி மாதத்து மூல நக்ஷத்திரம்.

௬௬. இக்கு-கருப்பு (வில்). விடையோன்-விருஷப வாகனத்தை யுடையோன், உருத்திரன். மலர்க்கணையாதலின் 'ஈர்ங்கணை' என்றார். ஆலம்-விஷம். தூர்த்தன்-விடபுருஷன். காலன்-இயமன்.

௬௭. மா தூரம்-மிக்க தூரம். மீது ஊர் அவா உற்று என்க. அவா-ஆசை. வியன்-பெருமை. மூதுஊர்-பழமையாகிய ஊர். சனனமாகிற சமுத்திரத்தைத் தூர் என்க. தூர என அகர யீற்று வியங்கோளாகக் கோடலுமாம்.

வேடு வளவென்று மெய்ஞ்ஞானக் கோயிலுண் மேவுநின்னை
நீடு வளமொன்றக் கண்டோ ரிதயத்து ணேசமென்னு
மூடு வளர்கின் றதுமண வாள முனித்தெய்வமே
கூடு வளகத்தன் பர்க்காணன் மாதருட் கூர்ப்பொக்குமே. (சுஅ)

மிக்குற்ற நின்னன்றி யாரருள் வாரற்பர் வேறுளரு
மிக்குற்ற வென்றருங் கைவருத் தம்மன்றி விண்ணுளரு
முக்குற்ற தொப்பவென் பான்மண வாள முனித்தெய்வமே
முக்குற்ற மிங்கொழி நின்முன்பின் னேரெம் முகங்கொள்ளவே. (சுகூ)

குருகூ ருமணி யரங்கமு நாளுங் குலாவிமகிழ்ந்
தொருகூ ருமன்மகிழ்க் கோனெதிக் கோனை யுளத்துள்வைத்தாய்
முருகூ ருமலர்த் தொடைமண வாள முனித்தெய்வமே
யிருகூ ருமரொடும் வந்தக லாதென் னிதயத்துள்ளே. (எ0)

வடுவற் கமைவிக்குங் கொங்கையர் பான்மனம் வைத்தவென்மே
னடுவற் கடகோடைத் தீப்பக னேர்நம ருட்களுய்க்கு
முடுவற் கணமெற்று முன்மண வாள முனித்தெய்வமே
யடுவற்க மாநும ரெற்சூழ நீவிரைந் தஞ்சலென்றே. (எக)

---

சுஅ. வேள் துவள வென்று என்க. வேள்-மன்மதன். துவளல்-தளர்தல். நேசமென்னும் மூடு வளர்கின்றது உவளகத்திடத்தே அன்பரைக் காண்கின்ற கற்புடை மாதரது உள் கூர்ப்பினை ஒக்குமென்க. உவளகம்-அந்தப்புரம். உள் கூர்ப்பு-சந்தோஷ மிகுதி. கற்புடை மகளிர் என்பார் 'நன்மாதர்' என்றார். "பண்டுவருங் குறிபகர்ந்து பாசறையிற் பொருள்வயினிற் பிரிந்து போன-வண்டு தொடர் நறுந்தெரிய லுயிரனைய கொழுநர்வர மணித்தே ரோடுங்-கண்டுமனங் களிசிறப்ப வொளிசிறந்து மெலிவகலுங் கற்பினோர்" என்றார் கம்பநாடரும்.

சுகூ. உமியைக் குற்றக் கைவருந்தத்தை யன்றி வேறு என்ன தரும் என்க. உருமு-இடி. உருமு உக்கு உற்றது ஒப்ப எனப் பிரிக்க. முக்குற்றம்-காம வெகுளி மயக்கங்கள். "காமம் வெகுளி மயக்க மிவைமூன்றி-னாமங் கெடக்கெடு நோய்" என்ப வாகலின், 'முக்குற்ற மிங்கு ஒழி' என்றாரென்க.

எ0. குருகூர்-ஆழ்வார் திருநகரி. மகிழ்க்கோன்-வகுளாபரணன், நம்மாழ்வார். முருகு-வாசனை, தேனுமாம். உமரொடும் வந்து என் இதயத்தினுள்ளே அகலாது இரு என்க.

எக. வடு அற்கு அமைவிக்கும் கொங்கையர் என்க. வடு-நகக்குறி முதலிய. அல்-இரவு. வற்கட கோடைத் தீப் பகலில் என்க. முடுவல் கணம்-செந்நாய்க் கூட்டம். எற்றல்-பிடுங்கிக் கொல்லுதல். வற்கமாம் நமர் என்னைச் சூழ நீ அஞ்சலென்று விரைந்து அடு என்க. வற்கம்-வர்க்கம், கூட்டம். நமர்-நம்மவரான அடியார்கள். வற்கடம்-வறட்சி.

மக்கணக் கெல்லுமி ழொள்ளெயிற் றேழையர் வாய்த்ததமர்
தொக்கணக் குப்பங் கவிழ்புனல் போலுளஞ் சோர்வரயன்
முக்கணக் கன்றமர் தாமண வாள முனித்தெய்வமே
யெக்கணக் குந்தவிர் கின்றமர் தாமவ் வியல்பிலரே. (எ௨)

பெற்றவுந் திக்கம லன்சீ ரனுகனி பேணியென்றுங்
கற்றவுங் கற்கின் றவுங்கற் பவுகின் கழற்புகழே
முற்றவுந் தொண்டுனக் கியான்மண வாள முனித்தெய்வமே
கொற்றவும் பற்குல நேரித ரர்க்கோர்வெங் கோளரியே. (எ௩)

அட்டைக் கரணைக் கரவுக்குக் கால்கொடென் றூர்த்தடித்து
நெட்டைக் கரிய நமன்றம ரீர்த்து நெறிகளிற்கான்
முட்டைக்க வுந்துரப் பார்மண வாள முனித்தெய்வமே
யொட்டைக் கருதி யுடன்வந்தன் றுண்டுகொ ளூற்றெனையே. (எச)

நாத்தைக்கு மாறொண் சடகோப னோதிய நற்றமிழ்ப்பா
வோத்தைக் குறித்துரை யேன்பணி யேனுன்னை யுள்ளுணர்வின்
மோத்தைக்கு நேர்சிறி யேன்மண வாள முனித்தெய்வமே
சீத்தைக் குழாத்துடல் காத்திங்கு வாழ்கை சிறந்ததன்றே. (எரு)

ஆடார மைந்தர்பொன் பூமியி னேசம்மை யாரனனீர்
கோடார கைக்குலத் தால்வரு நோயுட் கொளார்மனத்தின்
மூடாரஞ் ஞான விருண்மண வாள முனித்தெய்வமே
நீடார ணத்தமி ழந்தாதி பாடு நினக்கன்பரே. (எசு)

---

எ௨. நக்கு எல் உமிழ் ஒள் எயிற்று ஏழையர் என்க. நக்கு-சிரித்து. எல்-காந்தி. எயிறு-தந்தம். மக்கள் முதலியோர் தொக்கு அண்ண என்க. அயன்-பிரமன். முக்கண் நக்கன்-திரிநேத்திரனை உருத்திரன். அவ் இயல்பு-அவ்வாறு உளஞ்சோருந் தன்மை.

எ௩. உந்திக் கமலனுகிய சீரனு மென்க. உந்திக்கமலன்-பத்ம நாபன். உம்மை-உயர்வுசிறப்பு. உந்திக் கமலம் பெற்றவன் எனக்கொண்டு பிரமதேவன் என்றுரைப்பினுமாம். உம்பல் குலம்-யானைக் கூட்டம். இதரர்-வைஷ்ணவ ரல்லாத பிறமதத்தோர். கோளரி-சிங்கம்.

எச. நமன் தமர்-யம கிங்கரர். கால் முள் தைக்கவுந் துரப்பார் என்க. துரப்பார்-செலுத்துவார். ஒட்டு-ஸம்பந்தம்.

எரு. நாவில் தைக்குமாறு ஒள்ளிய சடகோபன் ஓதி யருளிய நல்ல தமிழ்ப் பாக்களாலாகிய திருவாய்மொழி யென்னும் வேதத்தை என்க. ஓத்து-வேதம். மோத்தை-வெள்ளாட்டுக்கடா. சீத்தை-பதனழிவு.

எசு. ஆள்-அடிமை யாள். ஆள் தாரம் என வினைத்தொகையாக்கி ஆளப் படுகின்ற தார மென்றலு மாம். அனல்-நெருப்பு. கோள்-கிரகம். தாரகைக் குலம்-நக்ஷத்திர கணம். அஞ்ஞான விருள் மனத்தில் மூடாரென்க. தமிழ் ஆரண அந்தாதி-திராவிடவேதமாகிய திருவாய்மொழி நூற்றந்தாதி.

அகம்போத நீங்கியஞ் ஞானத்தின் மாதரை யாசித்தையா
சுகம்போர் செயவதற் குள்ளாயன் ஞர்கள் சுகம்வடவா
முகம்போ லெலவெண்ணி லேன்மண வாள முனித்தெய்வமே
யிகம்போதும் யான்பட்ட நோவெனக் கீயுன் னிணையடியே. (௭௭)

செம்மையி னுங்களைச் செவ்வே திருத்திரட் சிப்பனென்றே
யம்மை யினுந்தய வாதரங் கூர்ந்தளித் தாண்டெமக்கே
மும்மை யினுந் துணை யாமண வாள முனித்தெய்வமே
யெம்மை யினுங்கை விடாதினி யோம்பிவிண் ணேற்றிக்கொள்ளே. (௭௮)

ததியோ தனஞ்சுவைப் பாலன முண்ணவிச் சாதுரனு
யதியோக வாழ்வு பெறவெண்ணி னேனல தான்றகற்பின்
முதியோர் தொழுந்திரு வேமண வாள முனித்தெய்வமே
கதியோ பெறவெண்ணி லேனினிச் செய்வதென் கட்டுரையே. (௭௯)

நீசாம மேனிய னங்கவ னீயிங் கிலையன்பர்கைத்
தேசா மலகக் கனிசிகர் தேசிக சென்மவெந்நோய்
மூசாம லிங்கெனை யாண்மண வாள முனித்தெய்வமே
பேசாமல் வாவென்று சொல்வா ரெவரிப் பெருநிலத்தே. (௮௦)

மடங்காது ஞான மிலாவடி யோமிங்கு வாழ்தலினுற்
றடங்காது வார்குழை மாமா தவனுக்குத் தாரணிமேன்
முடங்காது லீலைகண் டாய்மண வாள முனித்தெய்வமே
திடங்காது ராகத ராமிவ ரென்றெம்மைச் சீறலையே. (௮௧)

---

௭௭. ஐ ஆசுகம்-மன்மதனது பஞ்ச பாணங்கள். அவை வனசம், சூதம், அசோகு, முல்லை, நீலம் என்பன. வடவா முகம்-வடவா முகாக்கினி.

௭௮. செம்மையில் நுங்களை எனக் கண்ணழிக்க. அம்மை-தாய். ஓம்பல்-காத்தல்.

௭௯. ததி ஓதனம்-தயிர்ச் சோறு. இச்சாதுரன்-மிக்க ஆசையை யுடையோன். பால் அன்னம்-பாற்சோறு. ஆன்ற கற்பின் முதியோர்-மிக்க கல்வியினையுடைய பெரியோர்கள். ஆன்ற என்பதற்கு-அமைந்த, மாட்சிமைப்பட்ட என்று முரைக்கலாம்.

௮௦. சாம மேனியன்-பசிய திருமேனியை யுடைய திருமால். நீ அவனாகவும், அவன் நீயாகவும் (பேதமற) உற்ற நிலை அடியார்களுக்குக் கரதலாமலகம் போல் நன்குணரக் கிடந்ததென்ரு ரென்க. சன்மமாகிய கொடிய நோய் மொய்த்துக் கொள்ளாமல் என்க. மூசல்-மொய்த்தல்.

௮௧. மடம் காது ஞானம்-அஞ்ஞானத்தைக் கெடுத்தொழிப்பதற்குக் காரணமாகிய மெய்யறிவு. முடங்காது-சுருங்காது. லீலை-விளையாட்டு. மாதவனுக்கு லீலை முடங்காது என்பது திடம்; (ஆகவின்) இவர் துராகதராம் என்று எம்மைச் சீறுது கா என்க. துராகதர்-தீமைபுரிவோர்.

பெருந்தேற லாரு மலர்க்கூந்தன் மேகம் பிணைவிழிசொன்
மருந்தே ரிளங்கொங்கை கோங்கரும் பாமட வார்முறுவன்
முருந்தே யெனவியந் தேன்மண வாள முனித்தெய்வமே
யிருந்தேன் புதிய விருந்தாய்ப் பிணிக்கும் யமனுக்குமே. (அ௨)

கிளரியங் கார்க்கடல் போலார்த் தெழுங்குரு கேசன்சொல்லால்
விளரியங் காக்குந் தமிழ்ப்பா வினின்மிக்க வேட்கையர்கின்
முளரியந் தாடொழு வார்மண வாள முனித்தெய்வமே
யுளரிய பாகிற டுற்சில ரேயிவ் வுலகத்துள்ளே. (அ௩)

வேட்டினை யாகிற்பன் மின்னார் கலவியை மீட்டெனையிந்
நாட்டினை யான்கொலின் னுனென்றுன் னன்பர் நயக்குநெறி
மூட்டினை யாகிலுய் வேன்மண வாள முனித்தெய்வமே
வாட்டிநை யாவுறு நோய்மருந் தாலுடன் மாறுமன்றே. (அ௪)

தளைப்பா ரவனிறை யாஞ்சன னங்களிற் ருழ்ந்தழுந்து
மிளைப்பா ரவராக் கடற்புவி ...ர்செய வீதற்றுவின்
முளைப்பா ரவருன் றமர்மண வாள முனித்தெய்வமே
யுளைப்பார வேழ்பரி யோன்மு.. லாங்கரி யோ.......... . (அ௫)

ஈப்பருந் தோரி முதலிவை யேசெறிந் தீர்த்துண்ணுமூ
னுப்பரும் பாவையர் மெய்யென்று மோவா தருவருப்பார்
மோப்பருன் பாத மலர்மண வாள முனித்தெய்வமே
தூப்பருந் தாண்மல ரோற்குமெய் தாவின்பந் துய்ப்பவரே. (அ௬)

---

அ௨. மடவார்களது கூந்தல், விழி, சொல், கொங்கை, முறுவல் ஆகிய இவற்றை முறையே மேகமே, பிணையே, மருந்தே, கோங்கரும்பே, முருந்தே என வியந்தேனுய்ப் பிணிக்கும் இயமனுக்கும் புதிய விருந்தா யிருந்தே னென்க. தேறல்-தேன். முறுவல்-தந்தம். பிணை-மான். மருந்து-தேவாமிர்தம். முருந்து-இறகினடியிற் குருத்து.

அ௩. கிளர்தல்-நிறைதல். விளரி அங்கு ஆக்கும் தமிழ்ப்பா என்க. விளரி-நெஞ்சாற்பிறக்கு மிசை. வேட்கையர்-ஆசையுடையோர். முளரி அம் தாள்-தாமரைப்பூவினையொத்த அழகிய திருவடிகள். நான்காவது அடிக்குப்பொருள் இனிது விளங்கவில்லை.

அ௪. மின்னார் கலவியை வேட்டு இனையாகிற்பன் என்க. வேட்டல்-ஆசை கூர்தல். இனைதல்-மனமிரங்கல். இவன்தானே முன்னம் இந்த நாட்டில் மின்னார் கலவியால் இனையாநின்ற இன்னான் என்று சொல்லுமாறு என்னைத் திருப்பி உன் அன்பர்கள் விரும்பிச் செல்லும் நெறியிலே சேர்ப்பாயாயின் யான் உய்வேன் என்க.

அ௫. இச்செய்யுளுக்குப் பொருள் இனிது விளங்கவில்லை.

அ௬. ஈயும், பருந்தும், நரியுங் கூடி இழுத்து உண்கின்ற மாமிசக்கட்டே பெறுதற்கரியரென்று கொண்டாடப்படுகின்ற பாவைமாரது சரீரம் என்று தெளிந்து அவரது மெய்யை மோவாதருவருத்து,உனது திவ்ய பரிமளங் கமழ்கின்ற பாதத்தாமரையை மோக்கும் அவரே தூய பெரிய தண்டினையுடைய தாமரை மலரோனாகிய பிரமனுக்கும் கிட்டாத இன்பத்தை அனுபவிக்குமவராமென்க.

கடமா கராம்பற்று நாண்மூல மேயெனக் காத்தருள்செய்
திடமா கராம்புயத் தாழிப் பிரான்பதஞ் சேண்வளர்தேன்
முடமாக்க ளிச்சித்தல் போன்மண வாள முனித்தெய்வமே
யிடமாக்க மேவலில் லென்றிச்சித் தேனெய்த லெவ்வணமே. (௮௭)

பத்திக் குறிப்புச் சிறிதுமில் லேனின்பொற் பாதமல்லா
லெத்திக்குஞ் சென்றுழன் றும்புகல் காண்கில னென்னப்பனே
முத்திக்கு வித்தெனுஞ் சீர்மண வாள முனித்தெய்வமே
தித்திக்கு நேர்மொழி யாராற்கெட் டேனென் செயலிதுவே. (௮௮)

தொண்டுன் கழற்கவர் தாமாய்ப் பொதுவறச் சூழ்ந்ததற்கே
மண்டும் பெருவிருப் புற்றோர் னைதருள் வாரிமொண்டு
மொண்டுண்டு கொண்டுழல் வார்மண வாள முனித்தெய்வமே
கண்டுய்ந் திடவெண்ணி நாயேனு மங்கது காமிப்பனே. (௮௯)

போதுந்தி யானரு ணின்னவ தாரப் புணர்ச்சியென்றென்
றோதுந் தியான முறும்பெரி யோருன் கருணையலை
மோதுந்தி யானணை வார்மண வாள முனித்தெய்வமே
தீதுந்தி யானவ மேபடிந் தேன்பவத் தீநதிக்கே. (௯0)

ஓவா மருங்கிற் குவிதர வேய்ங்குழ லூதிநின்ற
தேவா மரும்பெற னாவீறன் பொற்பத சேகரனே
மூவா மருந்தனை யாய்மண வாள முனித்தெய்வமே
நாவா மருண்டு மறவாதுன் னாமங்கள் சொல்லிடவே. (௯௧)

---

௮௭. கட மா-மதத்தினையுடைய மா, யானை. கராம்-முதலை. வலிய பெரிய திருக்கைத் தாமரையிடத்தே திருவாழியாழ்வானையுடைய பிரானது பதத்தை இடம், பொருள், ஏவல், இல் என்று இவற்றையே இச்சித்த யான், உயரமான கொம்பினிடத்தே வளர்கின்ற தேனை முடவன் இச்சித்தல் போல இச்சித்தேன். அப்பிரான் பதம் எனக்குக் கிடைப்பது எப்படி? என்க.

௮௮. பாதமல்லால் புகல் காண்கிலன் என்க. புகல்-புகலிடம். தித்திக்கின்ற இக்கு நேர் மொழியார் என்க. இக்கு-கரும்பு. தித்திக்கின்ற நேரிய மொழியார் என்றலுமாம்.

௮௯. அருள்வாரியை மொண்டுமொண்டு உண்டுகொண்டு உழல்வார் என்க. காமித்தல்-இச்சித்தல்.

௯0. போது உந்தியான்-பத்மநாபன். ஓதும் தியானம் உறும் பெரியோர் என்க. உந்தியால்-நதியால். தீது உந்தி-தீயவற்றை எற்றி. பெரியோர் தீது உந்தி உந்தியால் அணைவார் என்க. இனி, தீது உந்தி யான் அவமே படிந்தேன் என்றலுமொன்று. உந்துதல்-எறுதல்.

௯௧. ஒன்றோடொன்று சேர்தலின்றிப் பிரிந்து மேயும் பசுக்களெல்லாம் பக்கத்திலே வந்து குவியும்படி புல்லாங்குழல் ஊதிநின்ற தேவனாகிய ஸ்ரீகண்ண பிரானது அவதாரமாகிய நாவீறனாகிய நம்மாழ்வாரது அழகிய திருவடிகளை முடியிலுடையாய்! மூவாத மருந்து போல்வாய்! மணவாள மாமுனியாகிய கண்கண்ட தெய்வமே! உன் திருநாமங்களைச் சொல்லிட என் நா மருண்டும் மறவாது என்க.

சொற்போது கொண்டு னிணைத்தாள் பரவித் தொழுதுய்ந்திடா
மற்போது மென்றுபுல் லோர்கடை போயல மந்திரங்கி
முற்போது செய்வினை யான்மண வாள முனித்தெய்வமே
நிற்போதும் வேலை கருவிற் றிருவற்ற நீர்மையன்றே. (கூ௨)

அனமேய நீர்த்தடஞ் சூழ்பெரும் பூதூ ரதிபதிக்குன்
மனமேவுஞ் சேரயி லெனநல்கி வாழுனக் கும்மெனக்கு
முனமேயுண் டாந்தொடர் பேமண வாள முனித்தெய்வமே
யினமேது நீயெனைக் காவா திருக்கு மியல்புரையே. (கூ௩)

மட்டாட்சி செய்குழ லோர்மங்கை தன்வயத் தாற்படைக்கப்
பட்டாட் குளத்திச்சை யுற்றே மயங்கினன் பார்க்கின்முழு
முட்டாட் கமலனஃ தான்மண வாள முனித்தெய்வமே
நட்டாட்கொண் டென்னைப் புரந்துகொ ளைவரை நாசஞ்செய்தே (கூ௪)

வாழலன் றேசிகர் தங்கள் சிகாமணி நீயுறையுஞ்
சூழலன் பால்வலஞ் செய்தேழை யேனகர்ச் சூழ்ந்துழல்புன்
மோழலன் றேவடி யேன்மண வாள முனித்தெய்வமே
காழலன் றன்முன மானாய் விண்ணோர்க்குள்ளங் கைக்கனியே. (கூ௫)

இடும்பைப் பொதிக்கோ ரவுடதஞ் சேர்த்திந்த ஞாலத்தர்முன்
விடும்பைப் பொதிவ சனபூ டணத்தை விரித்துரைத்த
முடும்பைக் கிறையருள் சேர்மண வாள முனித்தெய்வமே
நெடும்பைத்த மாலரங் கன்சேட னுயென்னு னீங்கலையே. (கூ௬)

---

கூ௨. சொல் போது-சொல்லாகிய போது. போது-மலரும் பருவத்து அரும்பு. அலமந்து-மனம் கலங்கி. உய்ந்திடாம லலமந்திரங்கி யென்க. முற்போது-பூர்வ ஜன்மம்.

கூ௩. அனம் மேய-அன்னங்கள் மேவிய. ஏ! மணவாள முனித்தெய்வமே! என்க. காவாதிருக்கும் தன்மைக்கு யாது காரணம்? உரையாய் என்றுரென்க.

கூ௪. மட்டு-தேன். முள் தாள்-முள்ளோடு கூடிய தாள். முட்டாளாகிய கமலன் எனப் பிறிதொருபொருளும் சிலேடை வகையாற் காட்டி நின்றது. பிரமனே, தன்னாற்படைக்கப்பட்டுப் புத்திரியின் முறையிலுள்ள ஒரு மங்கை பொருட்டாக மயங்கினன் என்றால் யான் மயக்கமுற்றுக் கெடுதலில் புதுமை என்னே? ஆதலின் நீ ஐவரை நாசஞ்செய்து என்னை நட்டு ஆட்கொண்டு ரக்ஷித்தருளவேண்டும் என்று இரக்கின்றுரென்க.

கூ௫. நீ உறையுஞ் சூழலை அன்பால் வலஞ்செய்து ஏழையேன் வாழலன் என்க. மோழல்-பன்றி. நீதான் முன்னம் கலப்பையை ஆயுதமாக வுடைய பலராமனாக அவதரித்தருளினாய் என்பது விண்ணோர்க்கு உள்ளங்கைக்கனியாய் நன்கு விளங்கிற்று என்க.

கூ௬. இடும்பை-துன்பம். பைப்பொதியாகிய ஸ்ரீவசன பூஷணம் என்க. முடும்பைக்கு இறை என்றது பிள்ளை லோகாசார்ய ஜீயரை. நெடிய பசிய மேகம் போன்ற அரங்கேசனைத் தாங்குகின்ற சேடனாக நீ என்னுள் நீங்கலை என்றுரைப்பினும் பொருந்தும். சேடன்-ஏவல் செய்வோன்; தோழனுமாம். அரங்கனாகவும் சேடனாகவும் என்னுள் நீங்கலை என்பதும் ஒன்று. அரங்கனைச் சேடனாய்க் கொண்டு என்னுள் நீங்கலை என்றலு மிழுக்காது.

சனியே யெனத்தொடர் கன்மவெம் பாசந் தடுக்கநின்ற
வனியேறி யெய்த்திளைத் தேனைவந் தாட்கொள் வரவரமா
முனியேபொற் கோயி லுறைமண வாள முனித்தெய்வமே
துனியேதி லார்நகைக் கும்படி யான்புன்மை சூழ்ந்தனனே. (கூஎ)

சுருக்கல னைவரைத் துன்மதி யேனுன் றருல்லருண் முன்
கருக்கல வாதொழிந் தேனாத லாற்கமழ் வாசமில்புன்
முருக்கலர் போன்றனன் யான்மண வாள முனித்தெய்வமே
பெருக்கலர் நீங்கவென் னுள்ளத்து ளின்பப் பெருவெள்ளமே. (கூஅ)

கயங்குவை மூடவற் றோநீர் மிகினுநின் கண்ணருளைத்
தயங்குவை வேல்விழி யார்விர கானலஞ் சாடவற்றோ
முயங்குவை யேயென்னை நீமண வாள முனித்தெய்வமே
நயங்குவை யாயுண் டெனக்காத லாலிது நன்கருளே. (கூகூ)

கூர்பாலை மூள்கன லாக்கும்பெய் மேகக் குளிர்புனலைச்
சார்பாலை யோகெடுப் பார்சிறி யோர்கடக் கோரையுறை
மோர்பாலை வேறு செயுமண வாள முனித்தெய்வமே
யோர்பாலை வோர்க ளெனைவேறு செய்வ ருனைப்பிரித்தே. (க00)

தூண்டளிர்ப் பூந்தரு வாமோநின் னன்றிச் சொலுமிதரர்
பூண்டளிக் கோலம் புனைந்தெனைக் காக்கப் போதுவரோ
மூண்டளித் தாட்கொண்டு நீமண வாள முனித்தெய்வமே
காண்டளித் தூர விடாதடி யேனைக்கைக் கொண்டிடவே (க0க)

---

கூஎ. அவனி யேறி எய்த்து இளைத்தேனை வந்து ஆட்கொள் என்க. துனி-அச்சம்; கோபமுமாம். ஏதிலார்-பகைவர்.

கூஅ. ஐவரைச் சுருக்கலன், அருளை முன்னம் கருவிடத்தே கலவாது ஒழிந்தேன், ஆதலால் மணமில்லாத முருக்கம் பூவினை யொத்தேன், அலர் நீங்க என்னுள்ளத்து இன்பப் பெருவெள்ளத்தைப் பெருக்கு என்க. அலர்-பலரறிந்து பழி தூற்றல்; துன்பமுமாம்.

கூகூ. கயம்-குளம். கு-பூமி. வற்றோ-வல்லதோ. நினது திருக்கண்ணின் அருட்பிரவாகத்தை வேல் விழியார் விரகானலஞ் சாடவற்றோ என்க. வைவேல்-கூரிய வேல். அனலம்-அக்கினி. முயங்கல்-தழுவல். நயம் குவையாய் உண்டு என்க. குவை-குவியல், கூட்டம்.

க00. வெம்மை மிக்க பாலைநிலம் தன்பாற்பெய்யும் மேகத்தினது குளிர்ந்த நீரையும் மூண்டெரியுங் கனலாகச் செய்துவிடும்; ஸகவாஸ தோஷத்தால் சிறியோர் தக்கோரையும் ஐயோ! கெடுத்துவிடுவர்; பிரைகுத்து மோர் பாலை வேறு செய்யும்; இவை போல் ஐம்பொறிகளாகிற தீயோர்கள் என்னின்று நின்னைப் பிரித்த என்னைத் தனியே யிருக்கச் செய்கின்றார்கள் என்க. ஓர்பால்-ஒருபக்கத்தே; ஆராய்ச்சியாலென்றலுமாம்.

க0க. தள்ளித் தூர விடாது காண் என்க.

எப்பது மத்தொகை யாண்டுரைத் தெண்ணினு மெண்ணருஞ்சீ
லப்பது மக்கழ லோனெதிக் கோன்மகி ழார்த்தியொண்பா
முப்பது முப்பதுஞ் சொன்மண வாள முனித்தெய்வமே
செப்பது மற்றெ னுளங்தேறி யுன்கழல் சேர்வண்ணமே. (௧௦௨)

கதிரந் தமியடி யேனுள சிற்கரு திப்பணிதல்
சதிரந் தமிர்துத் துவம்விரும் பாதவஞ் சார்த்துமறை
முதிரந் தமிழுரை தேர்மண வாள முனித்தெய்வமே
வெதிரந் தமியை வுறுந்தன் னுள் வாழ்வெந் தழல்சுடவே. (௧௦௩)

நாப்பற்ற கிற்கிலை நின்புக ழோது நயம்வினையி
னுப்பற்ற நோக்கிக் கெடுப்பா னினைந்தடர் கின்றனநோய்
மூப்பற்ற திண்புக ழோய்மண வாள முனித்தெய்வமே
சாப்பற் றவிர்க்குங் கதிர்போலு நின்பொற் கழலெனக்கே. (௧௦௪)

பாத்துக் கலங்கரிக் கும்பூந் துகிற்கற் பரைப்புகழ்ந்து
நாத்துக்க முற்றது சொல்லவொண் ணாது நரைத்துடல்வீண்
மூத்துக் கழிந்த தருண்மண வாள முனித்தெய்வமே
சேத்துக் கமலம் புரைநின்பொற் றுடுதி செய்திடவே. (௧௦௫)

மென்ப ணிசைக்குஞ் சடகோபர் சொற்றமிழ் மெய்ப்பொருடோர்ந்
தன்பணி நற்றுள வோர்க்கேசெய் துய்கின்ற வந்நெறிநீ
முன்பணி வைத்ததன் றேமண வாள முனித்தெய்வமே
வன்பணி கட்கர சின்மூர்த்தி யேநல் வயிணவர்க்கே. (௧௦௬)

---

௧௦௨. பதுமம்-கோடா கோடி. சீலப் பதுமக் கழலோன் எதிக்கோன் என்க. ஆர்த்தி-குறை. அது உளங்தேறி உன் கழல் சேர் வண்ணம் செப்பு என்க.

௧௦௩. கதிரம்-கருங்காலி. மிர்து உத்துவம் விரும்பு ஆதவம் எனப்பிரித்து நாசத்தைச் செய்வதும் ஊர்த்துவமுகநோக்கிச் செல்வதுமான நெருப்பு என உரைக்க. முதிர் அம் தமிழ்-முதிர்ந்த அழகிய தமிழ். வெதிர் அந்தம் இயை வுறும்-மூங்கில் முடிவினைப் பொருந்துதலுறும். மூங்கில் தன்னுட் டோன்றும் நெருப்பினால் அழிதல் போல என் மனமாகிய கருங்காலி நின்னைப் பணிதலாகிய நெருப்பினால் அழியும் என்றார் என்க. மிர்துத்துவம் என்று கொள்ளலுமாம்.

௧௦௪. நின் புகழ் ஓதும் நயத்தினை நா பற்றகிற்கிலை; வினையின் ஆப்பினை நோய் அற்றம் நோக்கிக் கெடுப்பான் நினைந்து அடர்கின்றன என்க. ஆப்பு-ஆக்கை, சரீரம். அற்றம்-சமயம். கெடுப்பான்-கெடுக்க. அல் தவிர்க்குங் கதிர்போலு நின் பொற்கழல் எனக்குக் காப்பு என்க. அல்-இருள்.

௧௦௫. பாத்து-சோறு. சேத்து-சிவந்து. பொற்றாள் துதிசெய்திட அருள் என்க.

௧௦௬. நல்ல திருத்துழாய்மாலையை யணிகின்ற திருமாலுக்கே அன்பு செய்து உய்கின்ற அந்த ஸ்ரீவைஷ்ணவ நெறி நீ முன் பண்ணி வைத்தது என்க. பணி-பாம்பு.

செயல்வர னேவலன் றித்தவிர் மாதரிற் சேர்த்துடலக்
தயல்வர நாளுமுன் றொண்டர்க ளேவல்செய் சூழ்ச்சியுள
முயல்வர மீந்தருள் வாய்மண வாள முனித்தெய்வமே
பெயல்வர வொண்பயிர்க் கொத்தெம்மை யாளும் பெருந்தகையே. ()

திரும ணவாவுற் றணிவாளிப் பாரைத் திருத்தவெண்ணி
வருமண வாள முனிவாழி வாழிசொல் வாணனென்னும்
பெருமண வாய்மைபெற்றொண்டமிழென்னெஞ்சுட்பெய்தருண்மெய்க
குருமண வாழ்திரு வேங்கட நாத குருவென்றுமே. (௧0அ)

---

௧0௭. வரன்-நாயகன். பெயல்-மழை. பயிர்க்குப் பெயல் வரவினை யொத்து எம்மை யாளும் பெருந்தகையே என்க.

௧0அ. திருமண்-திருமண்காப்பு. அவா உற்று-விருப்பமுற்று. திருவேங்கடநாத குரு என்றும் வாழி யென்க.



